***ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய சாரத்தில் குருபரம்பராசாரம் - ஸ்வாமி பெரியாழ்வார் - திருமொழி (5-2-8)***

*__ஏதங்கள் ஆயின எல்லாம் இறங்கலிடுவித்து என்னுள்ளே பீதகவாடை பிரானார் பிரம குருவாகி வந்து போதில் கமல வந் நெஞ்சில் புகுந்து என் சென்னித்திடரில் பாத விலச்சினை வைத்தார் பண்டன்று பட்டினம் காப்பே__*

# *__பாசுரத்தின் பொருள்__* :

பல கோடி பிறவிகளுக்கு ஹேதுவான பாப புண்ய கர்மங்களை விலக்கி, என் மனம் உணரும்படியாக திருப்பீதாம்பரத்தை உடையவனான எம்பெருமான், அக்ஞானத்தை போக்கி சம்சயம் விபர்யயம் அற்ற ஞானத்தை அருள குருவாக எழுந்தருளி, அதாவது அறிவுக்கு இருப்பிடானதும் அந்தர்யாமியையும் அறிய ஒட்டாத ஹேயங்களை உடையதுமான ஹ்ருதய கமலத்தினுள் பிரவேசித்து, அடியேன் சிரஸிலே திருபாத முத்திரையை எறியருளப் பண்ணினவனாவான், அத்தால் முன்பு செய்த பிறவிகளுக்கு காரணமான கர்மாக்களை அறுத்து காத்தருளவே.

# *__பூர்வ பக்ஷ விளக்கம்__* :

*__பண்டு அன்று பட்டினம் காப்பே__* என்கிற பாசுர பதங்களைக் கொண்டு, ‘முன்பு போல் அன்றிக்கே இப்போது ஆச்சார்ய அபிமானத்தாலே ரக்ஷையை அடைந்து’ என்று விளக்கமளித்து, பகவத் ராமானுஜ க்ரந்த நோக்கான, வேத மார்க்கமான, பூர்வாசார்யர்கள் வழியான, மோக்ஷ உபாயமான ஸாத்யோபாயத்தை நிஷேதிப்பர், ஸித்தாந்த பூர்வபக்ஷிகள். ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய சாரத்தில், பூர்வாசார்ய பக்ஷத்தையும், அதன் விரோத பக்ஷத்தையும் ப்ரமாண பூர்வகமாக கண்டித்து விளக்கி அருளியுள்ளார்.

*__ஸித்தாந்த விளக்கம்__* :

1. குரு என்கிற சொல்,

*__கு ஷப்தஸ்து அந்தகாரஹ ஸ்யாத். ரு ஷப்தஹ தன்னிரோதகஹ. அந்தகாரஹ நிரோதித்வாத். குரு ரித்யபிதீயதே__*

அதாவது, *__கு__* என்ற சப்தம் அறியாமையையும் *__ரு__* என்ற சப்தம் அதை போக்குவதையும் குறிக்கும். அதனால் அறியாமையை போக்குபவனே குரு ஆகிறான்.

# ஸகல உபநிஷத் ஸாரமான, கண்ணனால் உபதேசிக்கப் பட்ட, பகவத் கீதையில் (4-34)

*__தத் வித்தி ப்ரணிபாதேன பரிப்ரஷ்னேன ஸேவயா. உபதேஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்ஷிந:__*

அதாவது, ஆத்ம ஞானத்தை பெற விரும்பும் நீ அந்த ஜ்ஞானத்தை பிழையற உணர்ந்த தத்வ வித்துக்களான பெரியோர்களிடம், ப்ரணாமாதிகளை செய்து பணிவுடன் அடங்கி கேட்டு அறிய வேண்டும், என்று பக்தி யோகத்திற்கு அங்கமான கர்ம யோகத்தை விளக்கும் போது கண்ணன் அருளினான். மோக்ஷத்திற்கான ஒர் உபாயத்தில் இழியும் முன்பு ஈஸ்வர மற்றும் ஜீவர்களின் ஸ்வரூப ஸ்வபாவங்களை அறிவது அவசியமாகிறது. அதாவது, ஸர்வேஸ்வரன் ஸ்வாமி என்றும் ஜீவர்கள் தாஸ பூதர்கள் என்பதும் அறிய வேண்டுவது, என்பது மோக்ஷத்தில் ஆசை உண்டாக காரணமாகும். அதானால், தாஸத்வ ஞானத்தின் முக்கியத்வத்தை கூறுவதற்காக, ஸர்வேஸ்வரன் ஸ்வாமி என்றும் ஜீவர்கள் தாஸ பூதர்கள் என்பதும் அறிய வேண்டுவதையே மோக்ஷ காரணமாகச் சொல்லப் படுகிறது. அதனால், அந்த எண்ணம் நீங்காமல் மனதில் நின்ற பிறகு, சாஸ்த்திரத்தில் விதிக்கப் பட்ட மோக்ஷ ஸாதனமான அனுஷ்டானத்தை செய்ய வேண்டும், என்பது பஹுவித ப்ரமாண ஸித்தம்.

2. சுவேதாசுதர உபநிஷத்,

*__யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ தஸ்யைதே கதிதா ஹ்யர்தா: ப்ரகாஷந்தே மஹாத்மந:__*

என்கிறது. அதாவது, எவனுக்கு, ஸர்வேஸ்வரனான ஸ்ரீமந் நாரயணனிடத்தில் உள்ள பக்தி போல் குருவினிடத்திலும் பக்தி உள்ளதோ, அவனுக்கு குருவின் அனுக்ரஹத்தால் ஸகல ஆத்ம விஷயாமான அர்த்தங்களும், தெளிவாகும்.

ஞான ப்ரதானம் செய்விக்கும் ஆசார்யன், சிஷ்யனை முமுக்ஷுவாக்கி மோக்ஷ உபாயத்தில் தெளிவு பெற வழி செய்கிறார். அவ்விதத்திலே ஆசார்ய ஸ்ரேஷ்டர் பகவத் ராமானுஜர். அவர் க்ரந்த நோக்கை பின்பற்றி ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயசாரத்தை அருளிய ஸ்வாமி தேசிகனும் ஆவர்.

3. ஸ்வாமி தேசிகன், ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய சாரத்தில், ஆசார்ய இலக்கணமாக

*__ஏதே மஹ்ய மபோட மன்மத க்ஷுரா உன்மாதயா நாதாதய்ஹ த்ரயந்த ப்ரதிநந்தனீய விவித உதந்தாஹா ஸ்வதந்தாமிஹ ஷ்ரத்தா தவ்ய ஷரண்ய தம்பதிதயா திவ்யாபகா வ்யாபகாஹா ஸ்ப்ரத்தா விப்லவ விப்ரலம்ப பதவீ வைதேசிகா தேசிகாஹா__*

எனும்படியாக ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகம் செய்து போவதை அருளியுள்ளார்.

***ஸ்ப்ரத்தா*** **-** நாம் வித்வான் என்பதால் மற்றவர்களை அவமானப் படுத்துவதில் விருப்பம்

***விப்லவ*** **-** பூர்வாசார்யர்கள் அளித்த விளக்கங்களை மாற்றி அமைத்து ஸத் ஸம்ப்ரதாயத்தை அழிப்பது

***விப்ரலம்ப பதவி*** **-** தன் சிஷ்யர்களை ஏமாற்றும் எண்ணத்தோடு தன் பாண்டித்யத்தினால், அதாவது வ்யாகரண தர்க்க சாஸ்த்திர ஞானத்தால், சாஸ்த்திர விஷய அர்த்தங்களை மாற்றி திசை திருப்புவது

***வைதேசிகா தேசிகா*** **-** ஆகிய ஹேயங்களிலிருந்து விலகி இருப்பவர்கள் நம் ஆசார்யர்களான நாதமுனி போன்றவர்கள். ( ***நாதாதய தேசகா:*** )

# ஆதலால், கூரத்தாழ்வான்

*__லக்ஷ்மி நாத ஸமாரம்பாம் நாத யாமுன மத்யமாம் அஸ்மத் ஆசார்ய பர்யந்தாம் வந்தே குரு பரம்பராம்__*

என அக்ஞானத்தை போக்கி அருளிய குரு பரம்பரையை வந்தனம் செய்கிறார்.

4. ஸ்ரீராமானுஜ க்ரந்தங்களோடு அத்யந்த அர்த்த விரோதம் கொண்டவர்கள் பூர்வபக்ஷிகள், என்பது ப்ரமாண பலத்தால் ஸித்தம் !

**# *ஸ்ரீ ராமானுஜ ஸித்தாந்த பக்ஷம்* -**

ஸ்ரீபாஷ்யத்தை தொடங்கும் போது

*__பகவத் போதாயன க்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்திம் பூர்வாசார்யா: ஸஞ்சிக்ஷிபு: தன் மத அனுசாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே__*

என ஸ்ரீ ராமானுஜர் அருளினார். பகவத் போதாயனர் செய்தருளிய மிகவும் விஸ்தாரமான ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்தியை பூர்வாசார்யர்கள் சுருக்கமாக அருளிச் செய்துள்ளார்கள். அவர்களுடைய மதத்தை

அனுஸரித்து ஸூத்ரத்தில் உள்ள அக்ஷரங்களுக்கு வ்யாக்யானம் பண்ணுகிறோம், என்று அருளிச் செய்துள்ளார்.

அதனால், பூர்வாசார்யர்களின் க்ரந்த நோக்கு உத்தேச்யம் என்பது தெளிவு.

# *ஸித்தாந்த பூர்வபக்ஷிகளின் பக்ஷம்* -

உபநிஷத் சாரமான ப்ருஹ்ம ஸூத்ரத்துக்கு வ்யாக்யானமான பகவத் ராமானுஜரின் *ஸ்ரீ பாஷ்ய, கீதா பாஷ்ய கத்யாதிகளில்*, சாஸ்த்ரீயமான ஸாத்யோபாயத்தை மோக்ஷ காரணமாக விதித்து வெளியிட்ட போதும், அந்த ஆசார்யோத்தமரின் க்ரந்த விரோதமாக, ஸித்தோபாய ப்ரதிபத்தி மட்டுமே மோக்ஷ காரணம் என்று நிர்தேசிக்கிறார்கள் ஸித்தாந்த பூர்வபக்ஷிகள், என்பதனை முமுக்ஷூபடி க்ரந்தங்களைக் கொண்டு தெளியலாம் :

*கத்யர்த்தமாவது புத்யர்த்தமாய் அத்யவஸி என்றபடி* (எண் - 239) - அதாவது, வ்ரஜகதௌ என்கிற தாதுவிலே கத்யர்த்தமாய் 'கத்யர்த்தா புத்யர்த்தா:' என்கிற ந்யாயத்தாலே கத்யர்த்தமாவது புத்யர்த்தமாய் அத்யவஸி என்றபடி

வேத மார்க்கமான பகவத் ராமானுஜரால் ஸ்ரீபாஷ்ய கத்யாதிகளில் சாஸ்த்ரீயமான ஸாத்யோபாயத்தை விளக்கி இருக்க, ஸாத்யோபாயத்தை நிஷேதித்து விளக்குவது, பூர்வபக்ஷிகளின் ஸம்ப்ரதாய விரோத நோக்கம். அசாஸ்த்ரீயம்.

# *ஸ்வாமி தேசிகனின் பக்ஷம்* -

ஆசார்ய அனுக்ரஹமளிக்கும் பலனை, ஸ்வாமி தேசிகனின் *நிகமனாதிகார* காரிகை கொண்டும் அறியலாம் :

***கர பதரித விச்வ: கஸ்சித் ஆசார்ய த்ருஷ்டயா முஷித நிகில மோஹோ மூல மத்ராதி போகே: ஸகுண விஷய ஸித்தௌ ஸம்ப்ரதாய ப்ரயச்சன் சுசிரித ஸிலஹாரி ஸூரி ப்ருந்தாபிநந்த்ய:***

அதாவது, பாக்கியசாலியான ஒரு சம்சாரி ஜீவன், ஆசார்ய கடாக்ஷத்தால், தத்வ ஹித புருஷார்த்தங்களை உள்ளங்கனி நெல்லிக் கனி போல தெளிந்தவனாய், அக்ஞானம் நீங்கப் பெற்றவனாய், மூல மந்த்ராதி அர்த்தங்களை உணர்ந்து அனுபவம் உடையவனாய், சிஷ்ய குண பூர்த்தி உடையோருக்கு உபதேசிப்பவனாய், நல்ல அனுஷ்டானங்களைக் கை கொள்பவனாய் , நித்ய ஸூரிகளால் கொண்டாடப் பெறுபவனாக போற்றப் படுகிறான்.

ஆக, ஆசார்ய சம்பந்தம், சாஸ்த்திர விஹிதமான அனுஷ்டான பர்யந்தம் இருக்க வேண்டும், என்று, பூர்வாசார்யர்கள் வழியிலே நிர்தேசித்தார்.

5. பாசுர பத உரை :

# *ஏதங்கள் ஆயின எல்லாம் இறங்கலிடுவித்து* - பல கோடி பிறவிகளுக்கு ஹேதுவான பாப புண்ய கர்மங்களை விலக்கி,

# *என்னுள்ளே பீதகவாடை பிரானார்* - என் மனம் உணரும்படியாக திருப்பீதாம்பரத்தை உடையவனான எம்பெருமான்,

# *பிரம குருவாகி வந்து* - அக்ஞானத்தை போக்கி சம்சயம் விபர்யயம் அற்ற ஞானத்தை அருள குருவாக எழுந்தருளி,

# *போதில் கமல வந் நெஞ்சில் புகுந்து* - அதாவது அறிவுக்கு இருப்பிடானதும் அந்தர்யாமியையும் அறிய ஒட்டாத ஹேயங்களை உடையதுமான ஹ்ருதய கமலத்தினுள் பிரவேசித்து,

# *என் சென்னித்திடரில் பாத விலச்சினை வைத்தார்* - அடியேன் சிரஸிலே திருபாத முத்திரையை எறியருளப் பண்ணினவனாவான்,

# *பண்டன்று பட்டினம் காப்பே* - அத்தால் முன்பு செய்த பிறவிகளுக்கு காரணமான கர்மாக்களை அறுத்து காத்தருளவே.

6. ஸ்வாமி தேசிகனின் *குரு பரம்பராசார* வரிகள் :

***இப்படி தான் ப்ரவர்த்திப்பித்த ஸத்பதத்துக்கு ப்ரகடராயும் ப்ரசன்னராயும் இருந்துள்ள பாஷாண்டிகளால் உபரோதம் வாராமைக்காக 'ஸாக்ஷாத் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்ய மயீம் தனும் மக்னானு தரதே லோகான் காருண்யா ஷாஸ்த்ர பாணினா' என்றும் 'பீதகவாடை பிரானார் பிரம குருவாகி வந்து' என்றும் சொல்லுகிறபடியே அகஸ்த்ய சேவிதமான தேசத்திலே அநேக தேசிக அபதேசத்தாலே அவதரித்து அருளினான்***

இதன் பொருளாவது :

# *இப்படி தான் ப்ரவர்த்திப்பித்த ஸத்பதத்துக்கு* - எம்பெருமான், பலவாறாக ப்ரவர்த்திக்கபட்ட வேதத்துக்கும் அதன் சாரார்த்தங்களுக்கும் - உதாரணமாக ஹயக்ரீவன், நர-நாராயணன், கீதாசார்யன் போன்ற நேர்முகமாகவும், சனகர், பராசரர், வ்யாசர் போன்ற மஹரிஷிகளாலும், ஆழ்வார்கள் போன்ற மஹநாயர்களாலும் அருளப்பெற்ற சாஸ்த்திர ப்ரவர்த்தகத்துக்கு

# *ப்ரகடராயும் ப்ரசன்னராயும் இருந்துள்ள பாஷாண்டிகளால்* - இந்த ஸம்ப்ரதாயத்தை விரோதிக்கும் நேர் எதிரிகளாலும், ஸம்ப்ரதாயத்தை மாற்றி விளக்கும் மறைமுக எதிரிகளாலும்

# *உபரோதம் வாராமைக்காக* - முன்னோர் வழி சாஸ்த்திர ப்ரவர்த்தகத்துக்கு தடை ஏற்படாமல் இருக்க

# *ஸாக்ஷாத் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்ய மயீம் தனும் மக்னானு தரதே லோகான் காருண்யா ஷாஸ்த்ர பாணினா* - பூர்வர்கள் வழி மீறாத வைதீக ஸத் ஸம்ப்ரதாயத்தில் தோன்றிய அனைத்து ஆசார்யர்களுமே ஸர்வேஸ்வரனின் அம்சம் உடையவர்கள்

# *என்றும் 'பீதகவாடை பிரானார் பிரம குருவாகி வந்து' என்றும் சொல்லுகிறபடியே* - என்கிற ஜயாக்ய ஸம்ஹிதா வரிகளின்படியும், பெரியாழ்வார் திருமொழியாலும் அருளப்பட்டபடி

# *அகஸ்த்ய சேவிதமான தேசத்திலே* - அகத்தியரின் இப்பகுதியில்

# *அநேக தேசிக அபதேசத்தாலே* - பல ஸதாசார்யர்களாக, அதாவது அந்த மஹநாயர்களின் பூர்வர் வழி உபதேசம் செய்யும் காலத்தில் அவர்களது ஜிஹ்வையில் குடி கொண்டு அனுக்ரஹித்து

# *அவதரித்து அருளினான்* - இவ்வாறு பல ஸத் ஸம்ப்ரதாய ஆசார்யர்களாவும் அவதரித்து சாஸ்த்திர ப்ரவர்த்தகம் செய்தருளினான் அந்த ஸர்வேஸ்வரன்.

***ந தைவம் தேசிகாத் பரம்***

***தாஸன் தண்ணீர்பள்ளி க்ருஷ்ணன்***

*****